

# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

நந்தன - புரட்டாசி - 2012 - செப்டம்பர்

கோவிலூர் ஆண்டவர்

சீர்வளர் சீர் நாச்சியப்ப ஞான தேசிகர்

கோவிலூர் மடாலயம் - கோவிலூர் - கா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

நந்தன - புரட்டாசி - 2012 - செப்டம்பர் இதழ் - 3

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனிச் சுற்றுக்கு

உ
சிவமயம்

**இறை வணக்கம்**

வானவர் அசமாந் தொடர்பினால் உலகோர்
வழுத்துறும் வன்னிஜங் கரனை
வான அரதன மணிஅறு முகனை
மாசறு கொற்றவாள் இறையை
வானவர் முதுவன் பாலன வலவன்
வணங்குநல் திருநெலை மாதை
வான வரதனாம் முத்திராம ஈச
வள்ளலை வணங்கிவாழ்த் திடுவாம்.




# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

மன்னவர் மறைந்து ஆண்டு ஒன்று கடந்துவிட்டது. ஆண்டவர் அருளாலும் குருநாதர் நாச்சியப்பர் ஆசியாலும் அவர்தம் வழித்தடத்திலேயே பணிகள் நடைபெற்று வருகின்றன. செய்து வந்த அறப்பணிகள் முறையாகத் தொடர்கின்றன.

இம்மாதம் (செப்டம்பர்) 23ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை நாச்சியப்ப சுவாமிகள் முதற் குருபூசை வருகிறது. அவர்கள் தொண்டின் அறிவிற்கும், பெருமைக்கும் ஏற்ப ஐந்து நாள் திருநாள் மங்கலமாகக் கொண்டாடுவதற்குத் திட்டமிடப்பட்டுள்ளது. தமிழகத்தின் தலைசிறந்த அறிஞர்கள், கலைஞர்கள், சிவாச்சார்யர்கள், வேதவிற்பன்னர்கள் கலந்து கொள்கிறார்கள். விழா சீரும் சிறப்புமாக நடைபெறும். அன்பர்கள் அனைவரும் கலந்து கொண்டு பயன்பெற வேண்டியது.

நாச்சியப்ப சுவாமிகள் கல்வி, கலை, இலக்கியம், சமூகம், ஆன்மீகம் எனப்பல துறைகளில் தம்முடைய அக்கறையை நிலை நிறுத்தித் தொண்டாற்றினாலும் முதியோருக்கு உதவும் பணியை முக்கியமாகக் கருதினார்கள். தனி ஒருவனுக்கு உணவில்லையெனில் ஜகத்தினை அழித்திடுவோம் என்ற பாரதியும், வாடும் பயிரைக் கண்டு வாடினேன் என்ற வள்ளலாரும் போல, வாடிய முதியோர் முகங்களைக் கண்டு நெகிழ்ந்து போவார்கள்.

இந்த முதியோருக்கு உதவுகின்ற சேவை அவர்கள் துறவறம் ஏற்பதற்கு முன்னரே சிறிய அளவில் தொடங்கப்பட்டது. பின்னர் படிப்படியாக வளர்ந்து இன்றைக்கு ஏறக்குறைய 850 பேருக்கு மாதம் ரூ.350 வீதம் உதவித்தொகை அனுப்பி வைக்கப்படுகின்றது. இதனை 1000 பேருக்கும் சற்றே கூடுதலாகவும் உதவித்தொகை அளிப்பதற்கு நம் அறநிலை தயாராக உள்ளது. இதனைச் சிறப்பாகச் செய்து முடிப்பதற்குச் சில தன்னார்வத் தொண்டர்களின் உதவி தேவைப்படுகிறது. நாம் அனுப்புகிற இத் தொகையிலேயே இரண்டு வேளைக் கஞ்சி நிறைவாகக் குடிப்பதாகப் பலர் சொல்லியிருக்கிறார்கள்.

ஆனால் இது போதாது. இன்றைக்கு, குறிப்பாக நம் பகுதியிலே உள்ள முதியோர் நிலை மிகவும் கவலையாகத்தான் உள்ளது. நுகர்வுக் கலாச்சாரத்தின் தாக்கத்தால் குடும்பம் உலகின் பல பாகங்களிலே தனித்தனித் தீவாக வாழ வேண்டிய கட்டாயம். முதியோர்கள் தனித்து விடப்பட்ட சூழ்நிலை. செல்வம் உள்ளோர்கள் கூட உணவிற்குச் சிரமப்பட வேண்டிய கட்டாயம் உள்ளது. இதனைக் களைவதற்கு அந்தந்த ஊர்களிலே ஓர் அமைப்பை ஏற்படுத்தி, சிரமப்படுகிற முதியோர்களுக்குத் தொகை பெற்றுக்கொண்டோ, அல்லது சலுகை விலையிலோ உணவளிக்கலாம். கடவுள் அருளாலே நம் பகுதி மக்கள் ஓரளவிற்கு நன்றாகவே உள்ளனர். செல்வந்தர்கள் எண்ணிக்கை, இல்லாதவர்கள் எண்ணிக்கையைவிட அதிகமாகத்தான் உள்ளது. அப்படிப்பட்டவர்கள் தங்கள் ஊரிலேயே உள்ள மக்களுக்கு (பெரும்பாலும் உறவினர்களாகவோ பங்காளிகளாகவோ இருப்பார்கள்) அவர்களுடைய கஞ்சிக் கவலையை மாற்ற வேண்டும்; கடவுளை எண்ணவேண்டிய காலத்தில் கஞ்சியை எண்ணி வருந்தும் நிலை அறவே கூடாது.

இதனைத் தனிப்பட்ட மனிதர்கள் எவ்வளவு பெரிய செல்வந்தராக இருந்தாலும், திட்டமிட்டுச் செய்ய இயலாது. எனவே ஊர் கூடித்தான் தேர் இழுக்க வேண்டும்; அன்பர்கள் கூடிச் சிந்திப்பார்களாக. ஓர் நல்ல முடிவிற்கு வருவார்களாக.

இறையருள் கிட்டட்டும். நல்ல வழிபிறக்கும்.

வேணும்
ஸ்ரீ சற்குருநாதன் துணை

# கோவிலூர் ஆதீன கர்த்தர்கள் வரலாறு

(காப்பியக் கவிஞர் நா. மீனவன்) (தொடர்ச்சி..)

## கோவிலூர் ஆண்டவர்

### ஆண்டவர் கோவிலூர் எழுந்தருளல் :

தமது குருபத்தினி தம்மிடம் மயிற்குஞ்சு கொண்டு வருமாறு சொன்னதை உளங்கொண்டு நண்பரான நல்லான் செட்டியாருடன் கழனிவனம் என்றழைக்கப் பெற்ற கோவிலூர்க்குச் சென்றார். ஆண்டவர் அங்கிருந்த வேடர்களிடம் இரண்டு மயிற்குஞ்சுகளை விரைவில் கொண்டு வாருங்கள் என்று சொல்லி விட்டு அங்கே வன்னிவனக் காட்டில் இருந்த கொற்றவாளீசரையும் திருநெல்லை அம்மையையும் கண்டு வணங்கினார்; அதனால் பேரின்பம் அடைந்து நல்லான் செட்டியாரை நோக்கி இவ்வாலயம் மிக அழகுடன் விளங்குவதோடு பல மகான்கள் இருப்பது போலவும் தோன்றுகின்றது. மேலும் நாம் தனித்திருக்கவும் ஏற்ற இடமாக உள்ளது. ஆகையால் நாம் இனிமேல் திங்களும் வெள்ளியும் வந்து வணங்கிச் செல்வோம் என்று கூறினார். பின்னர் வேடர்கள் கொண்டு வந்த மயிற்குஞ்சுகளைத் தம் குருமனைக்கு அனுப்பி வைத்தனர்.

### ஆண்டவர் குருநாதருக்கு இல்லம் அமைத்தல் :

தமது குருநாதரைக் கண்டுவர வேண்டும் என்ற அவா மிகுதியால் அடியவர் சிலரோடு தம் தந்தையாரும் உடன்வரச் சிக்கலுக்கு வந்து குருநாதரை வணங்கினார் ஆண்டவர். தமது குருவிற்கும் குருநாதரின் புதல்விமார் இருவருக்கும் இல்லம் அமைத்துக் கொடுக்க வேண்டும் என்ற கருத்துடன் தமது தந்தையாரிடம் பொருளுதவி வேண்டுமெனக் கேட்க அதற்கவர் ஒன்றும் கூறாது இருந்தார். அதுகண்ட ஆண்டவர் காது செவிடாகி விட்டதோ? என்று கூறிக் குருநாதரின் இல்லம் சென்று விட்டார்.

ஆண்டவரின் தந்தையார் செவிகள் உடனே கேட்கும் திறனை இழந்தன. அது கண்டு வருந்திய ஆண்டவரின் தந்தையார் நாம் பேசாமல் கெட்டோமே என்று ஆண்டவரைக் காண அவருடைய குருவின் இல்லம் சென்று ஆண்டவர் முன்னர் வாய் விட்டழுது புலம்பி அவருடைய திருக்கரத்தால் திருநீறு அளிக்க வேண்டுமென இறைஞ்சினார். உடனே குருநாதரும் உன் தந்தையாரின் துன்பம் தீர இப்பொழுதே திருநீறளிப்பாய் என்று கட்டளையிட்டார்; ஆண்டவரும் அவ்வாறே திருநீறளிக்க அவரது தந்தையார் கேட்கும் திறனைப் பெற்றார். உன் பெருமை அறியாது என்னுடைய கஞ்சக் குணத்தால் இவ்வாறு செய்து விட்டேன்; பொறுத்தருள்க என்று சொல்லிவிட்டுத் தாமே முன்னின்று குருவிற்கும் குருபுதல்வியர் இருவருக்கும் உரிய இல்லங்களைக் கட்டிக் கொடுத்தார்.

**ஆண்டவர் கருடனும் தானே என்பதை உணர்த்துதல் :**

ஒரு ஞாயிற்றுக் கிழமையன்று ஆண்டவரின் அன்பர் நல்லான் செட்டியார் கருடதரிசனம் காண வெளிப் போந்தார். அப்பொழுது எதிரே வந்த ஆண்டவர் நல்லான் நீ எங்கு செல்கின்றாய்? என்று வினவ நல்லான் செட்டியார் தான் கருட தரிசனம் செய்யப் புறப்பட்டதாகக் கூறினார். ஆண்டவரும் இன்று கருடன் தென்படான் நானே கருட வடிவம்தான் ஆதலால் என்னைத் தரிசனம் செய்து விட்டு உணவருந்துக என்றார்; நல்லான் செட்டியார் மறுமொழி ஏதும் கூறாது கருடனைக் கண்டுவர எண்ணிக் குளக்கரை நதிக்கரை முதலிய இடங்களில் அன்று மாலைவரை தேடியும் கருடன் அகப்படாமையால் மீண்டும் ஆண்டவர் திருமுன்பு வந்து நின்றனர். அவரை நோக்கிய ஆண்டவர் கருடன் வேறு நான் வேறு என்றனையே அவ்வாறு சென்று கருடனைக் கண்டாயோ? கருடனைப் போல இரண்டு கோணக் கால்கள் இருந்தால் அல்லவா நீ என்னைக் கருடனாகக் கருதுவை. அசையும் வடிவத்தோடு இருக்கின்ற நான் அனைத்திலும் ஆத்மாவாய் இருக்கின்றேன் என்பதை அறியவில்லையே?. குமரன் செட்டி

மெய்யப்பன் மகன் எனத்தானே என்னை நினைக்கின்றாய் இனியேனும் என்னைக் கருடனாக எண்ணி என்னை வணங்கி உன் விரதத்தை முடித்துக் கொள் என்றார். நல்லான் செட்டியாரும் பல அற்புதங்களை நாம் இவர்பால் கண்டும் மயக்க மதியின் பிடியில் இருந்தோமே என்று ஆண்டவர் ஆணையிட்டபடி வணங்கி உணவை உண்டார்.

**குருநாதர் திருமனைக்கு ஆண்டவர் அரிசி அனுப்புதல் :**

வாணிகப் பணியாக ஆண்டவர் திருநாகைக் காரோணம் சென்ற பொழுது தம்முடைய குருநாதர் இல்லத்திற்கு இருபத்தைந்து அரிசி மூட்டைகளை அனுப்பி வைத்தார். இதனை அறிந்த ஆண்டவரின் தமையனார் ஆகிய மாயாண்டி செட்டியார் வியாபாரத்திற்கு என்று வந்த அரிசியை இப்படிச் செலவிட்டால் முதல் எப்படி ஆகும் எனத் தம் இனத்தாரிடம் கூறிய செய்தியை அறிந்த ஆண்டவர்

புரிந்(து) ஒரு கோடி மறையோர்க்குப் பூமிபொன் பண்புடனே
வருந்தும் மிடிகெட வைப்பது தன்னில் மறைவுமுடிவு
தெரிந்தமெய்ஞ் ஞானிக்(கு) ஒருபிடி பிச்சை சிறப்புடனே
பொருந்த அமைப்பதற்(கு) ஒவ்வா(து) எனமறை போற்றியதே

என்று சிவப்பிரகாச சுவாமிகள் பாடிய பாடலைக் கடைக் குறிப்பில் எழுதி வைத்தனர். அதைக் கண்டு மாயாண்டி செட்டியாரும் மகிழ்வடைந்தனர்.

**குருநாதர் உகந்தலிங்க தேசிகர் பரிபூரணம் அடைதல்:-**

குருநாதரோடு இருந்து வேதாந்த விளக்கங்களை ஆண்டவர் அறிந்து கொண்டு இருந்த பொழுதில் ஆண்டவரின் குருநாதராகிய உகந்தலிங்க தேசிகர் கலியுகம் 4919 சாலி வாகன சகாப்தம் 1740 வெகு தானிய ஆண்டு பங்குனித் திங்கள் 26 ஆம் நாள் மங்கள வாரம்

ஏகாதசி திதி மக நட்சத்திரம் கூடிய நன்னாளில் பரம்பொருளோடு கலந்தருளினார். உடனே ஆண்டவர் திருவண்ணாமலை ஈசானிய சுவாமிகள், சிவகுரு சுவாமிகள், பரசுராம சுவாமிகள், திருநாகைக் காரோணம் அருணாசல சுவாமிகள், திருவாரூர் தட்சிணா மூர்த்தி சுவாமிகள் முதலிய ஞானிகளுக்கும் நகரத்திலே உள்ள அடியார்களுக்கும் திருமுகம் அனுப்பி வரவழைத்து அனைத்துச் சடங்குகளையும் விதிமுறைப்படி செய்து தம் குருநாதரைக் குறித்து

தடம்உயர் கடல்சூழ் பொருள்வைநன் னகரம்
தனில்மனுத் தேகமாய் விளங்கித்
திடமுடன் சுருதி சாத்திரவே தாந்தம்
சிந்தையில் அனுபவம் தெளிந்து
படிதனில் தனைவந்(து) அடுத்தவர்க்(கு) இரங்கிப்
பரமசற் குருவதாய் உணர்த்தி
அடியவர் அடிகட் கேஉகந்(து) ஆட்சி
அரன்பதி கயிலைவாழ்ந் தனனே.

என்று பாடியருளினர்.

**உகந்தலிங்க தேசிகர் சமாதி ஆலயம் :**

சமாதி அடைந்த தன் குருநாதர் ஆகிய உகந்தலிங்க தேசிகருக்கு ஓர் அழகிய ஆலயத்தை எழுப்பி அதன் வழிபாட்டுச் செலவிற்கென ஒரு மடாலயத்தை எழுப்பிச் சிதம்பரம் கேணி மடத்தைச் சார்ந்தவரும் வேளாண் குலதிலகரும் புராண காவியப் பயிற்சிகளில் சிறந்தவருமான வீரபத்திர சுவாமி என்பவரை நியமித்துப் பல நிலபுலங்களையும் பொருள்களையும் கொடுத்து விட்டு மறுபடி காரைக்குடி மாநகரத்திற்கு மீண்டனர் ஆண்டவர்.

**ஆண்டவரின் கோவிலூர்க் கோயில் திருப்பணி :**

காரைக்குடியில் இருக்கும் போது கோவிலூரில் திங்களும் வெள்ளியும் திருநெல்லையை வணங்கி வரும் வழக்கத்தை

மேற்கொண்ட ஆண்டவர் தம் அன்பர் நல்லான் செட்டியாருடன் வந்து கொற்றவாளீசரையும் திருநெல்லையையும் வணங்கிக் காரைக்குடி வர எண்ணுகையில் மழை மிகுதியாகப் பெய்தது. அதனால் திருநெல்லை அம்பிகையின் சந்நிதியின் முன்னுள்ள கூரைக் கொட்டகையில் துயிலத் தொடங்கினார். அக்கொட்டகையின் எல்லாப் பகுதிகளும் ஒழுக்காய் இருந்தமையால் எங்கும் நனைந்து சேறானபடியால் அன்றிரவு முழுவதும் தூங்காது இருந்தார். மறுநாள் காலை ஆண்டவர் நல்லான் செட்டியார் மூலம் கூலித் தொழிலாளரை அழைப்பித்து அக்கொட்டகையைப் பிரித்து விட்டு முன்போலவே பனை ஓலையாற் கட்ட ஆணையிட்டார். அவ்வாறே கூலித் தொழிலாளர் கொட்டகை மேல் ஏறியவுடன் அவற்றின் கால்கள் அடியற்று இருந்தமையாலோ அல்லது ஆண்டவரைக் கொண்டு கற்கோவிலாக்கிக் கொள்ளத் திருநெல்லை விரும்பினாளோ தெரியவில்லை, கால்கள் அடியோடு சாய்ந்தன. இதனால் வியப்படைந்த ஆண்டவர் நல்லான் செட்டியாரைப் பார்த்து இதனைக் கற்கோயிலாக்க வேண்டும். எனவே அதற்குரிய பொருளைச் சேர்த்தபின் அப்பணியைத் தொடங்குவோம் இப்போது வாணத்தை மட்டும் வெட்டுவிப்போம் என்று சொல்லி அவ்வாறே வாணத்தை வெட்டி விட்டுக் காரைக்குடி திரும்பினர்.

**ஆண்டவர் இல்லம் தேடித் திருநெல்லை வருதல்:**

இவ்வாறு வாணம் வெட்டச் செய்து விட்டு வந்த ஆண்டவர் அதற்குரிய முயற்சிளை மேற் கொள்ளாமல் மாணவர்களுக்கு வழக்கம் போல் ஞானதானம் செய்து கொண்டிருந்தார். ஓர் நாள் ஆண்டவர் வெளியில் சென்றிருந்த சமயம் திருநெல்லையம்மை ஒரு சிறிய பெண் வடிவங் கொண்டு ஆண்டவர் இல்லத்திற்கு எழுந்தருளினாள். அவ்வாறு வந்தவள் ஆண்டவரின் தாயாரைக் கண்டு எங்கே உனது மைந்தன்? என்று வினவ அவன் வெளியில் சென்றுள்ளான் என்று ஆண்டவரின் தாயார் பதிலுரைத்தார். திருநெல்லையும் அவரைப் பார்த்து

உன்னுடைய மைந்தன் கோவிலூருக்குத் தரிசனம் செய்ய வந்த பொழுது வெய்யில் மழை முதலான அனைத்திற்கும் உதவியாய் இருந்த கொட்டகையைப் பிரித்து அதனைக் கற்பணியாகச் செய்வேன் என்று கூறி ஊருக்கு வந்து விட்டான். அப்பணியைத் தாமதிக்காமல் உடனே செய்யச் சொல் இனியும் தாமதிப்பது நன்றன்று என்று கூறிவிட்டு உடன் மறைந்தும் போயினள். வியப்படைந்த தாயார் வள்ளியம்மை ஆச்சியும் ஆண்டவர் இல்லத்திற்கு வந்தபின் நடந்தவை அனைத்தையும் கூறினர். அதனைக் கேட்ட ஆண்டவர் மயிற்கூச் செறிந்து கண்ணீர் வார ஆனந்தம் கொண்டு அம்மா நீயே மகா பாக்கியவதி நான்முகன் ஆதியாய கடவுளராலும் காண்டற்கு அரிய அம்மையைக் கண்டாயே என்று கூறியபின் தம்மாற் பிரிக்கப்பட்ட கூரைக் கொட்டகையைக் கற்கோயிலாக்க முடிவு கொண்டு அதற்கான பொருள் தேடும் முயற்சியில் ஈடுபட்டார்.

(தொடரும்)

## கீதாசாரத் தாலாட்டு

(தொடர்ச்சி)

### நூல்

15. **வெய்யவினை உடற்குஎன்றால் மெய்இங்கே விழஆன்மா
ஐயம்அற நரகசொர்க்கம் அனுபவிப்பது ஏதுஎனவே.**

"கொடிய வினைகளால் உண்டாகும் பலன்கள் உடலுக்கே உரியது என்று கூறினால் என்னால் காணப்படும் உடல் இவ்வுலகில் இறந்து பிணமாக விழுந்து போகத் தனித்து நின்ற ஆன்மா நரகத்தில் துன்பத்தையும் சொர்க்கத்தில் இன்பத்தையும் அனுபவிப்பது என்பது எப்படி?" என்று அருச்சுனன் கேட்டான்.

16. **அனுபவமே இலைஅதுவீண் ஆரோபி தநிகழ்த்தில்
தனுகரணச் செயல்தனதாச் சார்வதுபோல் என்றவரோ.**

அதற்கு "நரக சொர்க்கம் அனுபவிப்பதென்பது ஆராய்ந்து காணுங்கால் அது அனுபவமே இல்லை, பருவுடலுக்கும் அகக்

கருவிக்குமான தொழில்களைத் தன்னுடைய தொழில்களாகக் கருதுவது போல அது ஒரு பயனற்ற மாயத் தோற்றம்" என்று கூறிய கண்ணன் நீரோ ?

(நரகத்தில் கஷ்டப்படுவது, சொர்க்கத்தில் இன்பம் அனுபவிப்பது என்பதெல்லாம் கூட மாயையே என்பது கருத்து).

17. **மற்றுஉடலின் செய்கைதன்மேல் வருமயக்கம் ஏதுஎனவே**
**முற்றுணர்வு ஒன்றுஇல்லாத மோகம்என்று**
**சொன்னவரோ.**

பருத்தல், இளைத்தல், பார்த்தல், நடத்தல் முதலிய உடலின் செய்கைகளை ஆன்மா மீது வந்து, பார்த்தேன், நடந்தேன், எனத் தோன்றும் மயக்கம் எப்படி வந்தது? என்று அருச்சுனன் கேட்க, முழுமையான அறிவைப் பெறாமல் தத்துவ ஞானம் இல்லாத மயக்கத்தால் தோன்றுகிறது என விடை தந்த கண்ணனோ ?

18. **அறிவுதே கம்தனக்கோ ஆன்மாவிற் கோஎனவே**
**பிறிவுசெயில் அசித்துஉடலம் பிரமம்அறிவு என்றவரோ.**

அறிவு உடலுக்கா? அல்லது ஆத்மாவிற்கா? என்று அருச்சுனன் வினவிய போது, உடலையும் ஆத்மாவையும் பிரித்துப் பார்க்கும்போது உடல் அறிவற்றது. ஆன்மாவாகிய பிரம்மமே அறிவு வடிவானது என்றுரைத்த பெருமானோ ?

19. **தேகம்அசித்து ஆகில்இந்தச் செயல்வருவது ஏதுஎனவே**
**ஏகபரஞ் சோதியின்முன் இருக்கையினால் என்றவரோ;**

உடல் அறிவற்றது என்றால் அதற்கு இயங்குதல் முதலான தொழில்கள் வந்து சேர்தல் எப்படி? என்று அருச்சுனன் வினவ, ×× சேதனம் ஆகிய ஒரே பரம்பொருளின் சன்னிதானத்தில் (பிரம்மப் பிரகாசத்தில்) உடல் இருப்பதால் இந்திரியங்களின் மூலம் அதற்குச் செயல்கள் உண்டு என்றவரோ ? ×× சேதனம் - அறிவுவடிவம்

20. **இருக்கினும்அ சேதனத்திற்கு இச்செயல்உண் டோஎனவே**
**உருக்குபடாக் காந்தம்முன்னில் ஊசிநிகர் என்றவரோ.**

அவ்வாறு உணரும் தன்மை பெற்று இருப்பினும் கல் போன்று ஜடமான அறிவற்ற உடலுக்கு வளர்தல் (பருத்தல்) பார்த்தல் ஆகிய இத்தொழில்கள் உள்ளனவோ? என்று அருச்சுனன் கேட்க, காந்தத்தின் முன்னிலையில் அசையாத இரும்பு ஊசிக்கு அசைவுகள் உண்டாவது போல அறிவற்ற ஜடமான உடலுக்கும் வளர்தல், பருத்தல் ஆகிய செயல்கள் பரம்பொருளின் சன்னிதானத்தில் உண்டாம் என்று உரைத்த பெருமானோ ?

21. **சொன்னசெயல் உடற்குஆனால் சுகதுக்கம்**
**யார்க்குஎனவே**
**அன்னசுக துக்கமும்தான் அவ்உடற்கே என்றவரோ.**

முற்கூறிய நன்மை தீமை ஆகிய தொழில்கள் உடலுக்கு என்றால் அதனால் வரும் பயனாகிய இன்பமும் துன்பமும் எவருக்கு? என்று கேட்ட அருச்சுனனுக்கு அவ்வாறு வரும் இன்பமும் துன்பமும் கூட உடலுக்கே என்று விடை தந்த கண்ணனோ ?

22. **சேதனமாம் ஆன்மாவைச் சேராத துக்கசுகம்**
**ஓதுசடம் ஆம்உடலை உற்றிடுமோ சொல்லும்என.**

ஞான வடிவான ஆன்மாவைப் பாதிக்காத துன்பமும் இன்பமும் போகத்திற்கு இடமான அறிவற்ற உடலைச் சேருமா? அடியேனுக்குச் சொல்லியருள்க என்று அருச்சுனன் கேட்டபோது

23. **பூதம்ஐந்தோடு ஐந்துஉயிர்கள் புலன்கள்பத்து**
**மனம்முதல் நான்கு**
**ஈதுஇருமெய் இதில்மனத்துக்கு இன்பதுன்பம்**
**என்றவரோ.**

ஐந்து பூதங்களுடன்,ஐந்து பிராணன்களுடன்,புலன்கள் பத்தும்,மனம் முதல் நான்கும், ஆகிய 24 தத்துவங்களே பருவுடலும் நுண்ணுடலும் ஆகிய இரு சரீரங்கள். இதில் மனத்திற்குத்தான் இன்ப துன்பங்கள் பொருந்தும் என்று கூறிய கண்ண பரமாத்மாவோ ?

**24. இந்தஇரு வகைத்தனுவிற்கு ஏதுஏது எனவினவ**
**முந்தியகா ரணம்அதனால் மூன்றுதனு என்றவரோ.**

பருவுடல் நுண்ணுடல் என இருவிதமாகக்கூறப்படும் இவ்வுடலுக்குக் காரணம் யாது? என்று அருச்சுனன் கேட்க, இவற்றிற்கு முற்பட்ட காரணம் அஞ்ஞானம். அந்த அஞ்ஞானத்தால் வந்தது இந்த உடல் ஆகும். எனவே இது காரண சரீரம். இக் காரண சரீரத்தோடு மேலே கூறிய இரண்டுடலும் சேர மூன்று உடல்களாக அவை கருதப்படும் என்று கூறிய கண்ணனோ ?

**25. மனம்அறியும் துக்கசுக வரவுஎன்றீர் அம்மனமும்**
**வினவில்அசே தனம்அலவோ விரித்துஎனக்கு**
**விளம்புஎன.**

இன்ப துன்பங்களின் வரவினை மனமானது உணரும் எனக் கூறி அருள் செய்தீர். ஆராயும் இடத்து அந்த மனமும் அறிவற்றது அல்லவோ? இதனை நான் அறிந்து கொள்வது எவ்வாறு என்பதனை எனக்கு விரித்துரைக்க வேண்டும் என்று அருச்சுனன் கேட்டான்.

**26. அம்மனத்தில் ஆன்மா அபேதம்போல் தோன்றுதலால்**
**விம்முதுக்க சுகத்தைமனம் மேவும்என்று சொன்னவரோ.**

அதற்கு முன்னே சொன்ன அந்த மனத்தின் கண் ஆன்மா ஒன்றுபட்டது போலத் தோன்றுதலால் மிகுதியான இன்ப துன்பங்களை மனமும் அடையும். (மனமும் ஆன்மாவும் ஒன்று என்று நாம் கருதுவதால் "நான் துக்க சுகங்களை அனுபவிக்கிறேன்" என்று மயங்குகிறோம்) என்று கூறியவரோ?

27. **அந்தமனோ துக்கசுகம் அதனிடத்து நில்லாமல்
வந்துஇலங்கும் ஆன்மாவை மருவியதுஎன்
சொல்லும்என.**

மனம் அனுபவிக்கின்ற இன்பதுன்பங்களை மனத்தோடு நில்லாமல் அறிவு வடிவான ஆன்மாவையும் பாதிக்கின்றதே,அது ஏன்? என் அருச்சுனன் கேட்க.

28. **வெய்யகன லின்சூடு மேல்வைத்த சட்டியின்ஊடு
உய்யபுனல் ஊடுவந்து அங்கு ஒன்றுதல்போல்
என்றவரோ.**

வெப்பம் மிகுந்த தீயின் கனல்படும்படியாக அதன்மேல் வைக்கப்பட்ட சட்டியிலே ஊற்றிய தண்ணீரில் அத்தீயின் சூடு ஏறுவது போல,இன்ப துன்பங்கள் ஆன்மாவைப் பாதிக்கின்றன. ( உள் மயக்கத்தினால்) என்று கூறியவரோ?

29. **சித்துஆகும் ஆன்மாவும் செடம்ஆகும் சித்தமும்தான்
ஒத்துஆங்கு இரண்டும்ஒன்றுஆய் உற்றவகை
சாற்றும்என.**

ஞான வடிவான ஆன்மாவும், அறிவற்றதாகிய மனமும் ஆகிய இரு பொருள்களும் வேற்றுமையின்றி ஒன்றானது போலப் பொருந்திய விதம் கூறியருள்க என்று அருச்சுனன் கேட்க

30. **வல்இரும்பு கனலுடனே மருவியது போல்மனமும்
ஒல்லையில்ஆன் மாஉடனே உற்றதுகாண் என்றவரோ.**

கடினமான இரும்பு,சிவந்த ஒளியுடைய தீயில் இருக்கும்போது அத்தீயின் ஒளியைப் பெற்று விளங்குதல் போல,அறிவற்ற மனமும் சுய ஒளியோடு திகழும் ஆன்மாவுடன் ஒன்றானதுபோல் தொன்று தொட்டுப் பொருந்தியது என்று கூறிய பெருமானோ?

(தொடரும்)

# கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

முனைவர். நா. வள்ளி

## திருநாட்டுப் படலம்

கோயிலூர்ப் புராணத்தில், பாயிரத்தைத் தொடர்ந்து 'திருநாட்டுப் படலம்' இடம் பெற்றுள்ளது. பொதுவாக எல்லாப் புராணங்களிலும், காப்பியங்களிலும் வருணிக்கப்படுவதைப் போலக் கோயிலூர்ப் புராணத்திலும் நாட்டு வருணனை இடம் பெறுகிறது. கோயிலூர் பாண்டிநாட்டில் உள்ள தலமாதலால் இங்குப் பாண்டி நாட்டு ஐந்நில வளம் பேசப்படுகிறது.

மெய்த் தவத்தை மேற்கொண்டு ஒழுகுகின்ற உத்தமர் உள்ளத்தில் உறைகின்றவள் திருநெல்லை. அவளோடு உடனாய கொற்றவாளீசுவரர் உறையும் கழனிநகர் உட்பட, பற்பல சிறந்த தலங்களையுடைய பாண்டி நாட்டின் சிறப்பைச் சொல்லத் தொடங்குகிறேன் என்கிறார் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை.

மிக உயரமான அலைகளையுடைய கன்னியாகுமரியைத் தென் எல்லையாகவும் கரைகள் உடையுமாறு நீர் மிகுந்து பெருகும் வெள்ளாற்றை வட எல்லையாகவும்,கிழக்கு மேற்கில் கடலை எல்லையாகவும் கொண்டு பொலிவது பாண்டிநன்னாடு; அளப்பரிய விளைச்சல் உடையதும் குற்றமற்ற கலைகள் மலிந்ததுமான பாண்டி நாட்டில் பண்பு மிக்க சான்றோர்களும், தாழ்விலாச் செல்வர்களாகிய வணிகர்களும் நிரம்ப வாழ்கின்ற நாடு பாண்டிநாடு.

நல்ல மழைவளம் உடையது பாண்டியநாடு. வெண்ணிற மேகங்கள் விண்ணிலே படர்ந்து, வண்டுகள் மொய்க்கும் பூக்களையுடைய ஞாழல் மரங்கள் நிறைந்துள்ள கடற்கரையை உடைய கடலிலே புகுந்து புனலுண்டு, இந்திரநீலமலரின் நிறங்கொண்டு, மீண்டும் விண்ணிலே ஏறி முழங்கி, மின்னி மழையாகப் பெய்தன

என்று கூறும் பிள்ளையவர்கள் மேகம் எவ்வாறு மின்னி, முழங்கியது என்பதற்கு, கோயிலூர் புராணச் செய்திகளையே உவமைகளாகக் கூறியிருக்கும் திறம் படித்து இன்புறுதற்குரியது.

"வலிய வீரபாண்டியனோடு வாது செய் மாயப்பலி முழங்கியதென முழக்கெழுப்பி மேற்பொங்கர் கலிவிடங்கொள் கண்டத்தினோன் கொடுத்த வாள் கைக்கொண்டு ஒலி விளங்கவன் விதிர்த்தென ஒளிர்தர மின்னியது" என்கிறார் புலவர்.

சமிவனத்திலே எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமான் மாயப் புலியை உருவாக்கி, அதைத் துரத்தச் செய்து வீரபாண்டியனை சமிவனத்திற்கு வரவழைத்து, அவனுக்குச் கொற்றவாள் ஈந்து அருள்செய்கிறார் என்பது புராணச் செய்தி. இங்கு அந்நிகழ்ச்சியைக் கூறி மாயப்புலி போல் மேகம் முழங்கியது; கொற்றவாள் போல் வானத்திலே மின்னல் தோன்றியது என்கிறது கோயிலூர்ப்புராணம்.

கதிரவன், விருப்பு வெறுப்பு இன்றி எல்லா இடங்களிலும் வெயிலைப் பொழிவதைப் போல. மழை எங்கும் பொழிந்தது,

'வரையிடந்தொறும் பொழிந்தன வளமலி தளவத்
தரையிடந்தொறும் பொழிந்தன தாமரைப் பழன
நிரையிடந்தொறும் பொழிந்தன நெய்தலென் றெடுத்துக்
கரையிடந்தொறும் பொழிந்தன வெயில் பொழிகதிர்போல்"

இறைச் சிந்தனையும், வேதாந்த ஆராய்ச்சியும் மேலிடுகிறபோது பன்மதமாகிய பிணிகள் அகலுவதைப் போல, மழை பெரு வெள்ளமாகப் பெருகியதால் கதிரவனின் வெம்மை அகன்றது.

குருவானவர் முப்பதப் பொருளை விருப்பொடு உபதேசித்து, மாணாக்கர்களின் அவித்தையை அகற்று வதைப்போல, மழையானது திங்கள் மும்மாரி பெய்து வாடிய பயிர்களைத் தழைக்கச் செய்தது.

மேகமாகிய ஆச்சாரியன்,வெற்பாகிய ஆசனத்திலே அமர்ந்து, வேதாந்தம் என்கிற பெருமழையைப் பெய்வித்தலும், மாயையாகிய கானல் கெட்டொழிந்தது என்று மழையை ஆச்சாரியனாக உருவகித்துக் கூறும் திறம் படித்து இன்புறத்தக்கது.

"பாய மேகமென்று உரைக்கும் ஆசாரியன் படர்வெற்பு
ஆய ஆதனத்தேறி வேதாந்தத்தின் அமைந்த
தூய வான்பொருட் பெருமழை பொழிதலும் தொடர்ந்து
மேய மாயையாங் கானல் கெட்டொழிந்தது விரைந்தே"

என்பது அப்பாடல்.

வேதாந்த ஆராய்ச்சி மேலிடும்போது பல்சமயக் கோள் எலாம் அகலுவதைப் போல, வெள்ளப் பெருக்கால் ஓடை, கான் என்பவையெல்லாம் தம்பெயரைத் தொலைத்தன.

இவ்வாறு மழையின் பெருவளத்தைப் பாடிய பிள்ளையவர்கள் சந்திர குலத்தில் தோன்றிய பாண்டியனுடைய நன்னாட்டின் ஐந்திணை வளத்தைச் சொல்லத் தொடங்கி முதலில் குறிஞ்சியின் வளத்தைக் கூறுகிறார்.

**குறிஞ்சியின் மாட்சி:**

மலையும் மலைசார்ந்த இடமுமான குறிஞ்சியில் வேங்கை மலர்கள் பொன்னிறமான பூக்களைச் சொரிகின்றன. புலித்தோலையும் மான்தோலையும் ஆடையாக அரையிலே அணிந்துள்ள குறிஞ்சிநிலத்து வேடுவர்கள், மலைபடு பொருட்களை உண்டு வாழ்கிறார்கள். அந்நிலத்திலே யானையொன்று தன்னிழலையே வேறோர் யானை எனக் கருதிக் கோபப்படுகிறது. யானையின் நிழலைப் பளிங்கினுள் கண்ட வேடுவர்கள், நிழலை உயிருள்ள யானை எனக் கருதி வேல்கொண்டு ஓச்சி, பின் உண்மை தெளிந்து நாணி நிற்பர். இக்காட்சியைப் பின்வருமாறு அழகுபட வருணிக்கிறது கோயிலூர்ப் புராணம்.

" நிழல் சுளி களிநல் யானை நிழல் பளிங்கதனுட் தோன்ற
உழல் சிலை வேடர் வேல்கொண்டு ஓச்சுபு நாணாநிற்பர்"

மூன்றுவிதமான அருவிகள் மலையினின்று வழிந்தோடு -கின்றனவாம். சல சலவெனப் பாயும் தண்நீர் அருவி ஒருபுறம்; பெண்கள் தங்கள் மார்பகங்களில் பூசிய செஞ்சாந்துக் குழம்பு கரைந்து ஓடும் அருவி ஒருபுறம்;வலனுயர் களிற்றியானையின் மதசல அருவி ஒருபுறம் என மூன்று அருவிகள் மலையிலிருந்து இழிந்து ஓடுகின்றன. மலையிலே உயர்ந்து வளர்ந்திருக்கின்ற மூங்கில்கள் காற்றிலே அசைந்து தலைவணங்கி, காற்றை உள்வாங்கி அதனால் எழும் இன்னிசையால் உலக உயிர்களை மகிழ்விக்கின்றன என்று குறிஞ்கிநிலத்தின் இயற்கையைப் பலவாறு வருணிக்கின்ற மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அடுத்து வரும் பாடல்களில் பாண்டிநாட்டின்கண் மலைத்தலங்களில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கின்ற தெய்வங்களைக் குறிப்பிடுகிறார்.

எல்லா உயிர்களுக்கும் இம்மையே இன்பத்தை நல்குபவரும் , பல்லாயிரவர் பணிந்து வணங்கும்படியாகவும் விளங்கும் 'குறும்பலா ஈசர்' உறைகின்ற குற்றால மலையை உடையது பாண்டிநாடு; உயிர்களின் வினையை வீட்டி, முத்தி இன்பத்தை நல்குகின்ற மங்கைபாகர் வீற்றிருக்கின்ற திருக்கொடுங்குன்றமாகிய பறம்புமலையையுடையது பாண்டிநாடு; கதிரவனும் நாணுகின்ற எழில் மேனியையுடையவனும் தன்னைத் தொழுவார்களுடைய மலங்களை வாட்டி அவர்களது தொல்வினையை வேரறுத்துக் கருணைகாட்டும் அறுமுகப்பெருமான் அருள்பாலிக்கின்ற 'பழமுதிர் சோலை' என்னும் வெற்பை உடையது பாண்டிநாடு; கடப்பந்தாரானாகிய முருகப்பெருமான் செறிந்த பல்லுலகு உய்யத் தேவேந்திரனது மகளாகிய தெய்வயானையை வதுவை செய்து விருப்பத்துடன் அமர்ந்திருக்கின்ற 'பரங்குன்று' என்னும் தலத்தையுடையது பாண்டிநாடு; மயூரம் பூசைசெய்த மயில்மலையாகிய குன்றக்குடியையும் தன்னகத்தே உடையது பாண்டிநாடு.

இவ்வாறாகப் பாண்டிநாட்டுக் குறிஞ்சி நிலத்தின் மேன்மைகளைப் பட்டியலிட்ட பிள்ளையவர்கள் அடுத்து முல்லை நிலத்தை வருணிக்கிறார்.

(தொடரும்)

## மொழி வளர்ச்சியில் சைவமடங்களின் பங்களிப்பு

[தமிழாகரர் தெ. முருகசாமி, புதுச்சேரி-9]

**நாநலம் என்னும் நலனுடைமை அந்நலம்**
**யாநலத் துள்ளதூஉம் அன்று (641)**

என்ற அய்யன் திருவள்ளுவரின் குறள் சொல்வன்மை பற்றியதாயினும் இக்குறள் நாக்கின் இடமாகத் தோன்றிய மொழிதான் மனிதகுல முன்னேற்றத்திற்கான மூல காரணம் என்பதைச் சேர்த்தே கூறுகிறது என்பதில் ஐயமில்லை.

மொழி இல்லையேல் வாழ்வில்லை. அம்மொழித் தோற்றத்திற்கான இடம் நாக்கு என்பதால்தான் மொழியை நாமகளாகப் போற்றி வழிபடும் தெய்வீகப்பண்பு தமிழில் உருவானது.

இம்மொழி வளர்ச்சி நாக்களவில் பேசியதோடமையாமல் அதற்கான எழுத்துவடிவம் உருவாக்கம் பெற்ற போதுதான் அதன் பரிணாமம் உயர்ந்தது. அந்தவகையில் மொழிக்கான எழுத்து வடிவ இலக்கியத்தோற்றங்கள் உருவாயின. அவை காலந்தோறும் அந்தந்த இடச்சூழலுக்கேற்ப வளர்ந்தன. அப்படியாக வளர்ந்த விதத்தில் பண்டைக்காலத்தில் புலவர்களாலும் பொதுமக்களாலும் போற்றப்பட்ட தமிழ் மாமன்னர்களால் சங்கம் வைத்து வளர்க்கப்பட்டது. அந்நிலையில் சங்கத்தமிழ் எனப்பட்டது. அதுவே, காலப்போக்கில் சமய நம்பிக்கை வளர்ச்சியால் திருமட ஆதீன நிறுவனங்களால் சமயத்தமிழாக அடையாளம் காணப்பட்டது. அங்ஙனம் அடையாளப்படுத்தப்பட்ட வகையில் சைவ, வைணவப் பிரிவில் சைவத் திருமடங்களின் மொழி வளர்ச்சிக்கான பங்களிப்பைக் காண்போமாக.

சமய நிறுவனங்கள் இருவகைப்படும். ஒன்று கோயில். மற்றது திருமடம். மன்னர் காலத்தில் மன்னர்களால் உருவாக்கப்பெற்றவை கோயில்கள். அவை பொதுவானவை. ஆனால் திருமடங்களோ குறிப்பிட்ட சமய விளம்பர, அதாவது, பிரச்சார நிறுவனமாகத் தனிப்பட்ட

முறையில் ஆதீனக்கர்த்தர்களால் உருவானவை. உலகத்திற்கு எல்லாம் ஆதியாய் உள்ள இறைவனிடமிருந்து உருவாகிவந்த அருளாளர்களால் இறைப்பணிக்கென உருவாக்கப்பட்ட நிறுவனமாகிய திருமடம் திருக்கயிலாயஞானபரம்பரை என்ற பொது அடை மொழியுடன் பலப்பல ஆதீனங்கள் உருவாயின.

இந்நிலையில், பண்டைய பெருநில, குறுநில மன்னர் காலத்திற்குப் பின்னர் ஏராளமான நிலச்சொத்துக்களுடன் கோயில் நிருவாகப்பொறுப்புடன் கூடிய இறைப்பணித்தொண்டில் தமிழையும் அதுசார்ந்த கலைகளையும் வளர்த்த பெருமை சைவ ஆதீனத்திருமடங்களுக்கே உண்டு.

பழைய நூல்கள் எவற்றிலும் ஆதீனம் என்ற வழக்கு இல்லை. திருமடம் என்ற பெயர்தான் பழைய வழக்காகக் காணப்படுகிறது. நாயன்மார்கள் தங்கியிருந்த இடங்கள் மடங்கள் எனப்பட்டதாகச் சேக்கிழார் கூறுகிறார். பழைய கல்வெட்டுக்களில் மடங்கள் காணப்படுகின்றன. ஆதீனம் என்ற பெயர் 1910இல் வெளியான அபிதான சிந்தாமணி என்ற நூலில்தான் காணப்படுகிறது என்றாலும், இதற்கு முன்னர் இப்பெயர் இருந்திருக்க வேண்டுமெனத் தெரிந்தாலும் அதன் காலத்தை அறியுமாறில்லை. எனினும் பதினைந்தாம் நூற்றாண்டில் காளமேகப்புலவர் பாடிய திருவானைக்காவுலாவில்தான் முதன்முதல், "பதினெண் மடம்" என்ற குறிப்பு வந்துள்ளது. அதன்பின்னர் தோன்றிய திருக்காளத்திநாதருலாவிலும் திருப்பூவணநாதருலாவிலும் அவற்றிற்குப் பின்னர் தாயுமானவரின் பதினெட்டாம் நூற்றாண்டில் அவரது பெயராலும் மடங்கள் இருந்தனவாக இலக்கியப் பரப்பில் தெரிகின்றன. ஆக, திருமடங்களே காலப்போக்கில் ஆதீனம் என்ற சிறப்புடன் துலங்கி, சைவத்தையும் தமிழையும் வளர்த்தன எனலாம்.

"சைவமும் தமிழும் தழைத்தினிது ஓங்குக" என்பது சைவ உலகில் கூறப்படும் ஒரு முதுமொழி. சைவம் இல்லாமல் தமிழில்லை.

தமிழில்லாமல் சைவம் இல்லை என்கிற அளவிற்குச் சங்க காலத்திற்குப் பிறகு தமிழை வளர்த்த பெருமை சைவத்திருமடங்களுக்கே உண்டு எனலாம். இச்சைவத்திருமடங்கள் பற்பலவாயினும் அவை சைவ ஆதீனங்கள் என்றும் வீர சைவ ஆதீனங்கள் என்றும், வேதாந்தத்திருமட ஆதீனங்கள் என்றும் மூன்று வகையாகக் காணப்படுகின்றன. பெயரளவில் இவ்வாறு வேறுபாடாகத்தெரிந்தாலும், தமிழ்மொழி வளர்ச்சியில் அவைகளின் பங்களிப்பு தெய்வத்தமிழுக்குப் பல்லாற்றானும் ஏற்றம் தருவதாகவே அமைந்துள்ளன. அதிலும் அந்தந்த ஆதீனங்களின் வளத்திற்கும் வாய்ப்பிற்கும் ஏற்ப அமைந்தன என்றால் அதுவே முழு உண்மை ஆகும்.

சமய வளர்ச்சிப் பணிதான் பொதுவாகத் திருமடங்களின் முதற்கடமையாகும். அதன் சார்பாகவே தமிழ்மொழி வளர்ச்சி அமையும். அந்தந்தத் திருமடப்பொறுப்பில் உள்ள திருக்கோயில் விழாக்களில் தமிழ்த்திருமுறைகள் ஓதுவதும் சமயத் தமிழ்ச்சொற்பொழிவுகளை நிகழ்த்துவதும்தான் மொழி வளர்ச்சிக்கான அடிப்படைக்களம். அவ்வாறே அடிக்கடி நிகழும் திருமடத்தின் குருபூசை விழாக்களிலும் தொடர்வது மொழிவளர்ச்சிக்கான முகவரி என்றே கூறலாம். ஏனெனில், அவ்வப்போது நடத்தப்பெறும் சமயச் சடங்குகளுக்கு மேலாக வெியிடப்பெறும் நூல் வெளியீடுகள்தாம் தமிழ்மொழி வளர்ச்சிக்கான விலாசங்கள் எனலாம். எடுத்துக்காட்டாகத் திருவாவடுதுறை ஆதீனத்திருமடத்தில் தைத்திங்களில் நடைபெறும் மகரத்தலைநாள் பெருவிழாத் தொடர்ச்சியில் திருமடத்தின் மூலவரான நமச்சிவாயமூர்த்தியின் குருபூசையின்போது ஆண்டாண்டுதோறும் வெளியிடப்பெற்ற நூல்கள் கணக்கில் அடங்காவாகும்.

நூல்கள் வெளியிடுவதோடு தமிழ்ப்புலவர்களை ஆதரித்தல் என்பது திருமடத்திற்கான பெரும்புகழ் எனலாம். குறிப்பாகக் குன்றக்குடி- திருவண்ணாமலை ஆதீனத்தில் தமிழாகரர்,

ஞானத்தமிழாகரர் எனப் பட்டங்கள் அளித்துப் புலவர்கள் கௌரவிக்கப்படுவது தமிழ்மொழி வளர்ச்சிக்கான ஊக்குவிப்பு எனலாம்.

எல்லாத்திருமடங்களிலும் மொழிவளர்ச்சிக்கான பங்களிப்பில் தங்களுக்கென உள்ள அச்சகங்கள் வாயிலாகச் சிறந்த நூல்களை வெளியிடுவதோடு திங்கள் இதழ்களை வெளியிடுவதன்மூலம் தமிழ்வளர்ச்சியின் பரப்பு விரிவாக்கம் பெறுகிறது என்பதில் ஐயமில்லை. சிறப்பாகத் திருவாவடுதுறையிலிருந்து மெய்கண்டார் இதழும் தருமபுர ஆதீனத்திலிருந்து ஞானசம்பந்தரும், திருப்பனந்தாள் காசிமடத்திலிருந்து குமரகுருபரரும், பேரூர் சாந்தலிங்கர் திருமடத்திலிருந்து சிவசாந்தலிங்கரும் பழநிசாதுசாமிகள் திருமடத்திலிருந்து சாதுசங்கொலியும், குன்றக்குடியிலிருந்து மக்கள்சிந்தனையும் வெளிவருவது குறிப்பிடத்தகுந்தவையாகும். இதன் தொடர்ச்சியாகவே திங்கள்இதழ் வெளியிடாத குறையாக இருந்த மயிலம்-பொம்மபுர ஆதீனத்தில் தற்போது முத்திங்கள் இதழாகச் சித்தர் சிவஞானி வெளியிடப்பெறுகிறது. இவ்வாறே காரைக்குடிக்கும் குன்றக்குடிக்கும் இடையில்உள்ள கோவிலூர் ஆதீனத்தில் தற்போது, திருநெல்லை என்ற திங்கள்இதழ் வெளிவரத்தொடங்கியுள்ளது.

அரிய பெரிய நூல்களை எல்லாத் திருமடங்களும் போட்டி போட்டுக்கொண்டு வெளியிடுவதானது தமிழ் வளர்ச்சிக்கான பேறு எனலாம். சிறப்பாக, தருமபுர ஆதீனம் வெளியிட்டுள்ள பன்னிரு திருமுறை வெளியீட்டைக் குறிப்பிடலாம். குமரகுருபரரின் பிரபந்தத் திரட்டைப் பலமுறை பதிப்பித்தளித்த பெருமை திருப்பனந்தாள் காசித்திருமடத்திற்கே உண்டு. அதுபோலக் கற்பனைக்களஞ்சியமாம் சிவப்பிரகாசரின் பிரபந்தத்திரட்டை உரையுடன் வெளியிட்ட பெருமையை மயிலம் பொம்மபுர ஆதீனம் அடைந்தது.

இவ்வாறு நூல்கள், திங்கள் இதழ்களைப்போலச் சைவசித்தாந்த நேர்முகப்பயிற்சியைத் தொடங்கி அதன் வாயிலாக உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் சமயத்தின்வழி மொழிவளர்ச்சியைச்செய்து வரும்

தொண்டிற்குத் திருவாவடுதுறை ஆதீனத்தைத் தலையாரக் கும்பிடவேண்டும். இதுஒரு புது அணுகுமுறையாகும். மேலும் பல்கலைக்கழகம் நடத்தும் அஞ்சல்வழித்துறைக்கல்விபோல் அஞ்சல்வழியாகச் சமயக் கல்வியைப் பரப்புவதும் மொழிவளர்ச்சிக்கான பங்களிப்பாக உள்ளது.

திருமட அமைப்பில் பெண் ஆதீனத் திருமடமாகத் திகழ்வது புதுக்கோட்டைத் திலகவதியார் ஆதீனமாகும். அதன் நிறுவனர் அன்னை சாயிமாதா பிருந்தாதேவியார் உலகெங்கிலும் சென்று சமயச்சொற்பொழிவாற்றியதோடு பல நூல்களை எழுதி வெளியிட்டுள்ளது குறிப்பிடத்தகுந்த ஒன்றாகும். அளவில் சிறியதாயினும் அரிய பெரிய தொண்டை அன்னைவழி தயானந்தசந்திரசேகரன் அவர்கள் சிறந்த நூலகத்தை உருவாக்கியதோடு கல்வி நிலைய உருவாக்கங்களால் திருமடத்திற்குப் பெருமை சேர்த்து வருகிறார்கள்.

எல்லாத் திருமடங்களும் சமயத்தமிழ் வளர்ச்சியான அளவில் நூல்களை வெளியிட்டாலும் கோவிலூர் ஆதீனம் மட்டும் சங்கத்தமிழ் வளர்ச்சியைக் கருத்தில் கொண்டு, செம்மொழித் தமிழான பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களை உரையுடன் மக்கள் பதிப்பாக வெளியிட்டுள்ளது பெருஞ்சிறப்பாகும். அம்மட்டோடன்றி வெளிநாடுகளில் வாழ் தமிழர்களுக்கு மொழிவழித் தமிழ்ப்பண்பாட்டை மறவாதிருக்கச் சிலமொழிபெயர்ப்பு வகையில் அறம் சார்ந்த, சமய விளக்கம் சார்ந்த நூல்களை அச்சிட்டனுப்பும் பணியும் கோவிலூர் ஆதீனம் செய்துவருவது துருவநட்சத்திரமான தொண்டு எனலாம். வேதாந்தமடமாகிய காஞ்சிசங்கரமடமும் சங்கநூலான அகநானூற்றை மயிலம் மகாவித்துவான் வே. சிவசுப்பிரமணியர் உரையுடன் வெளியிட்டுள்ளது சிறப்பான செய்தியாகும்.

திருமடங்கள் யாவற்றிலும் கோடைக்காலச் சமயவகுப்புகள் நடந்தாலும் அவைகள் தனித்தனியே சமய நூற் கருத்தரங்குகளை நடத்தி ஆய்வுக்கோவையாக ஆராய்ச்சி நூல்களை வெளிக்கொணர்வதன்மூலம் மொழி வளர்ச்சிக்குத் துணைபுரிந்து வருவது குறிப்பிடத்தகுந்த ஒன்றாகும். சிவப்பிரகாசர் கருத்தரங்கினைப் பேரூர் ஆதீனமும், குமரகுருபரர் கருத்தரங்கினைத் திருப்பனந்தாள் திருமடமும் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் கருத்தரங்கைக் கோவை சிரவை ஆதீனக் கௌமாரமடமும் நடத்தி அறிஞர்களின் விவாதத்தால் உருவான ஆய்வுத்தொகுதிகள் திருமடங்களின் வரவாக மொழிவளர்ச்சியில் ஒரு புது பரிமாணத்தைப் பெற்றது எனலாம்.

திருமடங்கள் யாவும் தமிழ்பரப்பும் நிறுவனங்களாகவே இருந்தாலும் சில ஆதீனத்திருமடங்கள் மட்டுமே தமிழ்க்கல்லூரியைத் தொடங்கி நடத்திவருகின்றன். பொதுவாக, எல்லாத்திருமடங்களுக்கும் கல்வி நிறுவனங்கள் உண்டு. அவற்றுள் தமிழ்க்கல்விக்கான கல்லூரியை முதன்முதலாக 1938இல் கண்ட ஆதீனம் மயிலம்-பொம்மபுரம் ஆதீனமாகும். அதற்குப் பிறகுதான் தருமபுரம், திருப்பனந்தாள், பேரூர் ஆதீனங்களில் தமிழ்க்கல்லூரிகள் தோன்றின. இவற்றால் ஏற்பட்ட மொழிவளர்ச்சி அளப்பரியது. பல புலவர்கள் உருவானார்கள். புதுப்புது நூல்கள் தமிழுக்கு வரவாயின.

திருமடத்தின் அதிபர்கள் திருமட வளாகத்திலேயே இருந்த வண்ணம் சைவத்தையும் தமிழையும் புரந்து வந்த வரலாறு ஒருபுறமிருக்க, திருமடத்தை விட்டு வெளியே வந்து தமிழை வளர்த்த வரலாற்றுப் பெருமை ஒரு சில திருமடத்திற்கே உண்டு. அந்த வரிசையில் முதலிடத்தைப் பெறுவது திருக்கோவலூர் ஆதீனம் திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் மடாலயமாகும்.

மறைமலையடிகளாலும், திரு.வி.க.வாலும் தந்தை பெரியாராலும் மதிக்கப்பெற்ற திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் அடிகள்தான் மக்களை நோக்கிய மடாதிபதியாகத் தமிழகமெங்கும்

பல்லக்கிலேயே பயணம் செய்து தமிழ்மொழியைப் பரப்பினார்கள். மதுரையில் பாண்டித்துரைத் தேவரால் நான்காம் தமிழ்ச்சங்கத்தை உருவாக்கச் செய்தார்கள். இத்தமிழ்ச் சங்கம் தோன்றியதால் பற்பல புதுமைகளைத் தமிழ்மொழி கண்டது. இவ்வாறு மக்களை நோக்கிய ஞானியாரின் தொண்டுதான், தமிழ்மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகளாருக்கு ஊக்கமாக இருந்ததென அவரே தம் வாழ்க்கை வரலாற்றில் குறிப்பிடுகிறார்கள். இந்த நடைமுறையைப் பேரூர் ஆதீனமும் சிரவை ஆதீன சுந்தரசுவாமிகளும் கடைப்பிடித்ததால் மொழிவழியான சமய மறுமலர்ச்சியும் விழிப்புணர்வும் தோன்றலாயின.

திருமடங்களில் நிலங்கள் சொத்துக்களாக இருந்தாலும், அங்குள்ள நூலகங்களும் ஓலைச்சுவடிக் காப்பகங்களும்தான் தமிழ்மொழி வளர்ச்சிக்கான பெருஞ்சொத்துக்கள் எனலாம். இந்தவகையில் திருவாமாத்தூர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் திருமடத்தில் உள்ள ஓலைச்சுவடிகள் அச்சேறினால் தெய்வத்தமிழ் மெச்சத்தகுந்த பெரும்புகழைப் பெறும் என்பதில் ஐயமில்லை.

அரசியல் வளர்ச்சி மேலோங்கிவிட்ட இந்நாளில் சமயங்கலந்த சமூகசிந்தனையில் மொழிவளர்ச்சியைப் புதுப்பரிமாணத்துடன் சில திருமடங்கள் நோக்கத்தொடங்கின என்பது இலக்கிய வரலாற்றின் புதிய பக்கங்கள் எனலாம். திருமடங்களில் தமிழல்லாத வடமொழிக்கான கல்வி பயிற்றுவிக்கப்படவில்லையானாலும் திருமடத் தொடர்பான திருக்கோயில்களில் வடமொழி சார்ந்த வேள்வி, அருச்சனைகள் பராமரிக்கப்பட்டு வருகின்றன. இருப்பினும் திருநெறிய தமிழ்நெறியை முன்னிலைப்படுத்தும் முனைப்பு முகிழ்த்துவிட்ட சூழலில் குறிப்பிட்ட திருமடங்கள் மட்டும் தமிழ்மொழி வளர்ச்சியையே கருத்தாகக்கொண்டு வேள்வி அருச்சனைகளைத் தமிழில் செய்வதென்பது வரவேற்புக்குரியதாகும். அந்தத்தடத்தில் பேரூர் ஆதீனம் முன்னிலை

பெறுகிறது. அதன் வழியாகப் பழநிசாதுசாமிகள் திருமடத்தின் அதிபர் தவத்திரு சாதுசண்முக அடிகளாரின் பங்களிப்பு மிகப்பெரிய வரவேற்பைப் பெற்றதாகும். அருள்நெறித்தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் இம்மொழிவழி அருச்சனையைத் தொடங்கிய பிதாமகராக விளங்கினாலும், கொங்குநாட்டுத் திருமடங்கள் அவ்வொற்றையடிப் பாதையை அகலப் படுத்திக்கொண்டே வருவது சமயத்தமிழ்வளர்ச்சிக்கு ஆக்கம் எனலாம்.

எண்ணிக்கையில் மடங்கள் பலவாக இருந்தாலும் அவைகள் பெரிய சிறிய ஆதீனங்களாகவும் விளங்கி, சிறுசிறு கிளைமடங்களையும் தம்முள் பெற்று, சமயப்பணிகளைச் செய்துவரும் தொடர்ச்சியில் சில மடங்கள் ஊடுபயிர் வளர்ச்சியைப்போல் மொழிவளர்ச்சியைச் செய்தாலும் பெரிய பெரிய திருமடங்கள் தோப்பாக வளர்ந்து மொழி வளர்ச்சியைச் செய்துவருவது தெய்வத்தமிழுக்கு ஏற்றம் எனலாம்.

கணினியின் பயன்பாடு மிகுந்துவிட்ட காலச்சூழலில் தகவல்சாதனங்களும் பெருகிவிட்ட நிலையில் பல திருமடங்களில் உள்ள ஓலைச்சுவடிகள் நூலாக்கம்பெற்றால் அது மொழிவளர்ச்சிக்கான சிகரம் தொட்ட சாதனையாக அமையும் என்பதில் ஐயமில்லை. மேலும், நூலகங்களில் உள்ள நூல்களைக் கணினிமயமாக்குவதால் உலகத்தமிழரும் உலகத்தாரும் கண்டு வியக்கும் இணையதளப் பங்களிப்பு தாய்த்தமிழ் வளர்ச்சிக்கான திருமட உதவியாக இருக்கும் என்பதிலும் ஐயமில்லையன்றோ? ஆன்மாக்களின் மடம் போக்கும் இடம் மடம் என்றாற் போலத் தமிழ்த்தடம் பார்த்துச் சைவசமயத் தேரை உருட்டும் எல்லா சைவ ஆதீனத்திருமடங்களின் மொழி வளர்ச்சிக்கான பங்களிப்பைத் தலையார வணங்குவோமாக.

## மடாலயம் தொடர்பான நிகழ்வுகள்

தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகளின் முதல் குருபூசை 23.9.2012 அன்று நடைபெற உள்ளதையொட்டி, கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் சார்பில் பல்வேறு போட்டிகள் கல்லூரி மாணவர்களுக்கும் பள்ளி மாணவர்களுக்கும் நடத்தப் பெற்றன. இப்போட்டிகளில் சுற்றுவட்டாரப் பள்ளி மாணவர்களும் கல்லூரி மாணவர்களும் கலந்து கொண்டனர்.

**மாறுவேடப் போட்டி ; குழு நடனப் போட்டி:**

தொடக்கப் பள்ளிகள் நிலையில் 3.9.2012 அன்று முற்பகலில் மாறுவேடப் போட்டியும் பிற்பகலில் குழுநடனப் போட்டியும் ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப் பள்ளியின் தலைமை ஆசிரியை திருமதி ட.மணிமொழி அவர்களின் ஒருங்கிணைப்பில் நடைபெற்றன.

மாறுவேடப் போட்டியில் 25 பள்ளிகளிலிருந்து 75 குழந்தைகள் கலந்துகொண்டனர். இப்போட்டியில் 13 பள்ளிகளைச் சார்ந்த 15 குழந்தைகள் பரிசு பெற்றனர்.

ஏழுபேர் கொண்ட குழுநடனப் போட்டியில் 22 பள்ளிகளிலிருந்து மாணவர்கள் பங்கேற்றனர். 14 பள்ளிகள் பரிசு பெற்றன. 98 மாணவர்கள் பரிசுக்குரிய குழுக்களில் இடம் பெற்றிருந்தனர்.

**மராத்தான் ஓட்டப் பந்தயம் :**

4.9.2012 அன்று காலை மராத்தான் ஓட்டப் பந்தயம் நடைபெற்றது. கோவிலூரில் ஓடத் தொடங்கிக் காரைக்குடி , கொப்புடையம்மன் கோவில் வரை சென்று சுற்றிவந்து மீண்டும் கோவிலூரை வந்தடைந்த ஆண்களில் 11 பேர் பரிசுகளை வென்றனர்.

கோவிலூாில் ஓடத் தொடங்கிக் காரைக்குடி பழைய பேருந்து நிலையம் வரை சென்று மீண்டும் கோவிலூரை வந்தடைந்த பெண்களில்13 பேர் பரிசுகளை வென்றனர். இப்போட்டி கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரி முதல்வர் டாக்டர் மூர்த்தி அவர்கள் ஒருங்கிணைப்பில் நடைபெற்றது. 9 பள்ளிகளைச் சார்ந்த 400 மாணவர்கள் இதில் பங்கேற்றனர். அனைவருக்கும் மடாலயத்தின் சார்பில் பனியன்கள் வழங்கப்பெற்றன.

**பேச்சுப் போட்டி:**

கல்லூரி மாணவர்களுக்கான தமிழ்ப் பேச்சுப் போட்டி 4.9.2012 அன்று நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியின் முதல்வர் திரு. D. ஜெயசீலன் அவர்கள் ஒருங்கிணைப்பில் நடைபெற்றது. 10 கல்லூரிகளிலிருந்து 25 மாணவர்கள் கலந்து கொண்டனர். தேவகோட்டை ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரியில் பயிலும் M.சர்மிளாதேவி, M.சுகன்யா ஆகியோர் முறையே முதல் பரிசும் மூன்றாம் பரிசும் பெற்றனர். பள்ளத்தூர் சீதாலெட்சுமி ஆச்சி மகளிர் கல்லூரி மாணவி M.சௌமியா இரண்டாம் பரிசும் அமராவதிபுதூர் ஸ்ரீராஜராஜன் தொழில்நுட்பக் கல்லூரி மாணவி GR. கனிமொழி ஆறுதல் பரிசும் பெற்றனர்.

**பாரதியார் கவிதைகள் ஒப்புவித்தல் போட்டி :**

4.9.2012 அன்று கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் பள்ளி முதல்வர் திருமதி மணிமொழி மோகன் அவர்களின் ஒருங்கிணைப்பில் ஆறாம் வகுப்பு முதல் எட்டாம் வகுப்பு வரை பயிலும் மாணவர்களுக்கான பாரதியார் கவிதைகள் ஒப்புவித்தல் போட்டி நடைபெற்றது. 14 பள்ளிகளிலிருந்து 42 மாணவர்கள் போட்டியில் கலந்துகொண்டனர்.

K. ரம்யா ஸ்ரீ (ஸ்ரீவித்யாகிரி மெட்ரிக் பள்ளி,புதுவயல்) முதல்பரிசும் இராம. சாத்தப்பன் (மகரிஷி வித்யாமந்திர், காரைக்குடி)

இரண்டாம் பரிசும் A.S.அழகுமதி (அரசு மேனிலைப்பள்ளி, ஒ.சிறுவயல்) மூன்றாம் பரிசும் பி. பிரியங்கா (அரசு உயர்நிலைப் பள்ளி,அதிகரம்) ம. சண்முகப்பிரியா (ஸ்ரீ கலைவாணி மெட்ரிக் மேனிலைப்பள்ளி) ஆறுதல் பரிசும் பெற்றனர்.

6.9.2012, 7.9.2012 ஆகிய நாள்களில் பள்ளி மாணவர்களுக்கான ஓவியப் போட்டி நடைபெற்றது. 26 பள்ளிகளிலிருந்து 156 மாணவர்கள் கலந்து கொண்டனர். 36 மாணவர்கள் பரிசுகளை வென்றனர்.

## BPE பட்டப்படிப்பு - தொடக்க விழா

தமிழ் நாட்டிலேயே முதன்முதலாக +2 முடித்த மாணவர்கள் நேரடியாக உடற்கல்வியில் பட்டம் பெறும் மூன்றாண்டுப் பட்ட வகுப்பு கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரியில் இக்கல்வியாண்டில் தொடங்கப்பட்டுள்ளது. கோவிலூர் ஆதீனம் சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமையில் நடைபெற்ற தொடக்க விழாவில் தமிழக அரசின் இளைஞர் நலம் மற்றும் விளையாட்டுத் துறைக் கூடுதல் தலைமைச் செயலர் ராஜ்குமார் IAS அவர்கள் வகுப்புகளைத் தொடங்கி வைத்தார். இவ்விழாவில் தேசிய மற்றும் உலக விளையாட்டுப் போட்டிகளில் பல பரிசுகளும் பட்டங்களும் பெற்ற நடராஜன் மற்றும் அன்னாவி ஆகியோர் கோவிலூர் மடாலயத்தின் சார்பில் பட்டமும் பணமும் பரிசாக அளித்துக் கௌரவிக்கப்பட்டனர்.

## ஆசிரியர் தின விழா

கோவிலூர் மடாலயத்தின் சனாதன தர்ம உலகப் பல்கலைக்கழகத்தால் நடத்தப் பெற்று வரும் கல்வி நிறுவனங்களில் பணிபுரியும் ஆசிரியர்களுக்கான ஆசிரியர் தின விழாப் போட்டிகள் 8.9.12 சனிக்கிழமையன்று நடைபெற்றன. இப்போட்டிகளில் ஆசிரியர்கள் திரளாக ஆர்வத்துடன் பங்கு பெற்றனர்.

ஆசிரியர் தின விழாக் கூட்டம் கோவிலூர் ஆதீனம் சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக்குலேசன் பள்ளி முதல்வர் திருமதி. மணிமொழி மோகன் அனைவரையும் வரவேற்றார். அழகப்பா அரசு கலைக் கல்லூரி முதல்வர் முனைவர் ஆ. தேவதாஸ் ஆசிரியர் தின விழா உரையாற்றினார். அவர் பேசுகையில் கோவிலூர் மடாலயம் அழிந்து வரும் பாரம்பரியக் கலைகளான தவில், நாதஸ்வரம், சிற்பக் கலை ஆகியவற்றைக் கற்பித்து வருவது பாராட்டுக்குரியது எனவும், ஏழை மாணவர்களுக்குக் குறைந்த கட்டணத்தில் கல்வி அளித்து வருவது போற்றுதலுக்கு உரியது எனவும் கூறினார். மேலும் ஆசிரியர்கள் அனைவருக்கும் நினைவுப் பரிசினையும் ஆசிரியர் தின விழாப் போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்கான பரிசுகளையும் வழங்கினார்.

இவ்விழாவில் நல்லாசிரியர்க்கான டாக்டர் ராதாகிருஷ்ணன் விருது பெற்ற நல்லாசிரியர் எஸ்.எம்.எஸ். வி. மேல்நிலைப்பள்ளியின் தலைமையாசிரியர் வள்ளியப்பன் பாராட்டிக் கௌரவிக்கப்பட்டார். நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி முதல்வர் முனைவர் குமரப்பன் வள்ளியப்பனைப் பாராட்டிப் பேசினார். ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப்பள்ளியின் தலைமையாசிரியை திருமதி L.மணிமொழி நன்றி கூறினார். நிகழ்ச்சிகளைப் பேராசிரியர் K.கலா தொகுத்து வழங்கினார்.





# நாச்சியப்ப சுவாமிகள்
# கலை அறிவியல் கல்லூரி, கோவிலூர்

கல்வித் துறையில் பாரம்பரியமிக்க அனுபவம் நிறைந்த கோவிலூர் மடாலயம் நடத்தும் இக்கல்லூரியில் (Subject to approval) மாணவ மாணவியர் சேர்ந்து படித்துப் பயன்பெற வேண்டுகிறோம்.

## 2012-2013 ஆம் கல்வி ஆண்டுக்கான மாணவர் சேர்க்கை நடைபெறுகிறது.

**கற்பிக்கப்பெறும் பாடப்பிரிவுகள் :**

| | |
|---|---|
| பி.எஸ்.ஸி கணிதம் | பி.எஸ்.ஸி கணினியியல் |
| பி.காம். | பி.காம் (கணினிப் பயன்பாட்டுடன்) |
| பி.பி.ஏ | பி.ஏ. ஆங்கில இலக்கியம். |

தொடர்புக்கு : **04565 - 234523, 94434 42361**

---

# நகரத்தார் திருமணச் சேவை மையம்
# கோவிலூர்

நம் சென்னைத் திருமடத்தில் கடந்த ஒன்பதாண்டுகளாக, தேவகோட்டை உயர்திரு. சோம. லெட்சுமணன் அவர்கள் வழிகாட்டுதலின் பேரில் நகரத்தார் திருமணச் சேவை மையம் நடைபெற்று வருகிறது.

அதன் சேவையை விரிவுபடுத்தி இப்போது நம் கோவிலூர் திருமடத்திலும் தன்னார்வத் தொண்டர்களின் ஆதரவால் நந்தன ஆண்டு சித்திரைத் திங்கள் பத்தாம் நாள் தொடங்கப்பெற்று நடைபெற்று வருகிறது.

வாரந்தோறும் சனிக்கிழமை காலை 10.00 மணி முதல் மாலை 5.00 மணி வரை திருமணச் சேவை நடைபெறுகிறது. அனைவரும் சேவையைப் பயன்படுத்த வேண்டுகிறோம்.

தொடர்புக்கு : **www.nagarathar.net , www. nagarathermatrimony.com**

# சனாதன தர்ம உலகப் பல்கலைக் கழக அறநிலை நடத்தும் கல்வி நிறுவனங்கள்

1. கோவிலூர் ஆண்டவர் பாரம்பரியக் கலை மற்றும் பண்பாட்டுக் கல்லூரி

   அ. திருமுறைக் கல்லூரி - 1995

   ஆ. நாதஸ்வரக் கல்லூரி - 1995

   இ. தவில் கல்லூரி - 1995

   ஈ. கல் சிற்பக் கல்லூரி - 2004

   உ. ஐம்பொன் சிலைக் கல்லூரி - 2005 (உலோகச் சிற்பம்)

   ஊ. மரச்சிற்பக் கல்லூரி - 2006

2. சீர் வளர் சீர் முத்துராமலிங்க ஆண்டவர் நர்சரி மற்றும் பிரைமரி பள்ளி - 1995
3. கோவிலூர் ஆண்டவர் மாண்டிசோரி பள்ளி - 1995
4. கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரி - 2007
5. கோவிலூர் ஆண்டவர் யோகா ஆராய்ச்சி மையம் - 2007
6. நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரி - 2009
7. கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் பள்ளி - 2010
8. கோவிலூர் ஆண்டவர் சமுதாயக் கல்லூரி - 2010
9. நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி - 2012ல் தொடங்கப் பெற உள்ளது.